உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தேவாரத் தல வணக்கம்

அமரர் கி. அருணாசல முதலியார்
அவர்களின் நினைவாக அன்பளிப்பு

அளிப்பவர்:

திருமதி சியாமளா அருணாசலம்

(1982) சீர்காழி.

## சிவநேசர் திருக்கூட்டம்,

காரைக்குடி.

உ

சிவமயம்

குரோதி ஆண்டு ஆடித்திங்கள் 28-ஆம் நாள்

12—8—64 புதன்கிழமை

சிதம்பரம் தாலுக்கா தெற்குவிருதாங்கன்

சைவத்திருவாளர், சிவபூஜாதுரந்தரர்,

## ஆ. பஞ்சாட்சரம் பிள்ளை அவர்களின்

அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவின்போது

சிவபூஜாநேயர்களுக்கு

சிதம்பரம் சிவஞான திருத்தளியின்



# அன்பளிப்பு



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# நூல் முகம்

தேவாரத் தல வணக்கம் என்ற இந் நூல், தேவாரம் பெற்ற தலங்களை நினைத்து வழிபடுவார்க்குப் பேருதவியாகும். தேவாரத் தலங்கள் இருநூற்று எழுபத்தைந்து, எனவே இந் நூல் இருநூற்று எழுபத்தைந்து அடிகளை உடையது. ஒவ்வொரு வரியும் போற்றி என்று முடிகிறது.

"தென் தில்லை மன்றினுள் ஆடி போற்றி" என நூல் தொடங்குகிறது. இது, மணிவாசகப் பெருமான் அருள் மொழி. "கயிலை மலையானே போற்றி போற்றி" என்று நூல் நிறைவெய்துகிறது. இது திருநாவுக்கரசடிகள் திருவாய்மொழி.

திருவாசகத்தில் தொடங்கி, தேவாரத்தில் நூல் முடிவது சாலப் பொருந்தும். தில்லைப் பதி தொட்டு, கயிலைமலை ஈறுக எல்லாத் தலங்கட்கும் போற்றி கூறுகிறது இந் நூல்.

தேவாரத் தல அமைப்பு முறையே அவ்வாறுதான். கோயில் என்று சிறப்புப் பெயரால் பாராட்டப்பெறும் சிதம்பரத்தை முதலாகக் கொண்டு அடுத்த ஊர் வரிசைக் கிரமப்படி சோழ நாட்டின் தலங்கள் நூற்றித்தொண்ணூற்றி ஒன்றை முதற்கண் மொழிந்து, அடுத்து ஈழ நாட்டுத் தலங்கள் இரண்டை இயம்பி, அதன் பின் பாண்டிநாட்டுத் தலங்கள் பதினான்கைப் பகர்ந்து பின் சேர நாட்டுத் தலம் ஒன்றைச் செப்பி, பின்னர், கொங்கு நாட்டுத் தலங்கள் ஏழைக் கூறி, பிறகு நடுநாட்டுத் தலங்கள் இருபத்திரண்டை நவின்று, பின்றை தொண்டை நாட்டுத் தலங்கள் முப்பத்திரண்டைச் சொல்லி, பிற்றைத் துளுவநாட்டுத் தலம் ஒன்றைப் பேசி, முடிவில் வடநாட்டுத் தலங்கள் ஐந்தை வழுத்தி

அதிலும் ஈருகத் திருக் கயிலை மலையைப் போற்றி அமைகிறது, இத் தேவாரத் தல வணக்க நூல்.

"முன்னோர் மொழி பொருளே அன்றி அவர் மொழியும் பொன்னே போல் போற்றுதும்" என்ற இலக்கணப்படி,

"தென் தில்லை மன்றினுள் ஆடி போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
பாங்கார் பழனத்து அழகா போற்றி
சீரார் திருவை யாறு போற்றி
ஈங்கோய் மலைஎம் எந்தாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
இடைமருது உறையும் எந்தாய் போற்றி
செழுமலர்ச் சிவபுரத்து அரசே போற்றி

ஆரூர் அமர்ந்த அரசே போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
பொருப்பமர் பூவணத்து அரனே போற்றி
குற்று லத்தெங் கூத்தா போற்றி
அண்ணு மலைஎம் அண்ணு போற்றி
ஏகம் பத்துறை எந்தாய் போற்றி
திருக்கழுக் குன்றில் செல்வா போற்றி "

என்ற பதிஞறு வரிகள் திருவாசகத்தினின்றும் அப்படியே எடுத்தாளப் பெற்றிருப்பது இந் நூலுக்குச் சாலப் பெருமை தருவது திருவாசகத்தில் வந்த தேவாரத் தலங்கள் இருபத்தாறு. அவ் இருபத்தாறுள் பதிஞறு தலங்களைப் போற்றும் போற்றித் திருவகவற் போற்றிகள் இங்கு கொள்ளப்பெற்றிருக்கின்றன. தவிர, தேவாரத்திலுள்ள சொல் தொடர்கள் இந்நூலுள் பற்பல இடங்களில் பெய்யப் பெற்றிருப்பது, போற்றற்குரியது. சிற்சில தலங்களின் போற்றி

களில் தல இறை பெயர்கள் அமைந்திருக்கின்றன. அட்ட வீரட்டங்களில் வழுவூர் வைப்புத் தலமே யன்றி, தேவாரத் தனிப்பதிகம் பெருத காரணத்தால் இந் நூலில் இடம்பெற முடியாமற் போயிற்று. எஞ்சிய வீரட்டத் தலங்கள் ஏழையும் குறிக்குங்கால் வீரட்டம் என்ற சொல் இந் நூலுள் பெய்யப்பெற்றிருப்பது ஓர் அழகு.

காரைக்குடியில் சைவசித்தாந்தப் பெருவாழ்வு வாழ்ந்து பல நூல்கள் செய்து புகழ்பெற்ற சொக்கலிங்க ஐயா அவர்கள் "அருச்சனைப் பத்து" என்று ஒரு நூல் இயற்றினர்கள். வேதங்கள் ஐயா என இறைவனை அழைக்கும் என்று திருவாசகம் செப்பும். சொக்கலிங்க ஐயாவை நாங்கள் ஐயா என அழைத்து மகிழ்வோம்.

அப்பெரியார் ஆக்கிய அருச்சனைப் பத்து அருளாளர் பதின்மரை வழிபட உண்டாக்கப் பெற்ற நூல். முழு முதற் கடவுளாகிய சிவ பெருமானை நாம் உணருமாறு காட்டியருளிய அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர் ஆகிய சமய குரவர் நால்வரையும், மறைந்து

கிடந்த தேவாரப் பாடல்களை எடுத்துத் தந்த நம்பியாண்டார் நம்பிகளையும், தொண்டர்சீர் பரவவல்ல சேக்கிழார் பெருமானையும் சைவ சித்தாந்த சாத்திரங்கள் தோன்றக் காரணராக இருந்த மெய்கண்ட தேவர், அருணந்தி சிவம், மறைஞானசம்பந்தர், உமாபதி சிவம் ஆகிய சந்தான குரவர் நால்வரையும் பரவுவது அவ் அருச்சனைப் பத்து, திருக்கோயில்களில் மேற்கண்ட அருளாளர் பதின்மரையும் ஒண் தீந்தமிழால் வழிபடுவதற்குச் சிறந்த நூல் அருச்சனைப் பத்து.

சொக்கலிங்க ஐயா அவர்களின் மைந்தர், சிவ பூசைச் செல்வர், எனது அரிய நண்பர் திருநாவுக்கரசரின் சீரிய உழைப்பால் இந் நூல் உருப் பெற்றிருக்கிறது. இதனை ஆக்கித் தந்த அவர் கட்குச் சைவ உலகம் கடப்பாடுடையது.

எங்கள் குருமூர்த்தி சைவசித்தாந்த ஞானபாநு ஈசான சிவாச் சாரிய சுவாமிகள் தலைமையில் நடைபெறும் காரைக்குடி இரண்டா வது சிவ பூசை மாநாட்டு நல்நாளாகிய இன்று சிவநேசர்

திருக்கூட்டம், இவ்வரிய நூலை வெளியிட்டுப் பெருமை அடைகிறது.

இதனை ஆய்ந்து நூல்முகம் எழுதும் பணியை எனக்கு அளித்த திருக்கூட்டத்தார்க்கும் தோன்றாத் துணையாக இருந்து முற்றுவித்த சிவபெருமானுக்கும் போற்றி போற்றி.

விகாரி – ஆவணி - ௬
22—8—1959.

ராய. சொ.

# பதிப்புரை.

இந்நூல் முதலிரண்டு பதிப்பு 2000 பிரதிகள் முழுதும் செலவாயினதாலும், தேவாரத்தலங்களை நாளும் நினைந்து வணங்க வாய்ப்பாக இருப்பதாலும் அன்பர்கள் பலர் மூன்றுவது பதிப்பு வெளிவர விரும்பியதாலும் இம் மூன்றும் பதிப்பு வெளிவருகிறது.

இந்நூலைத் தக்கவாறு ஆய்ந்து செப்பஞ்செய்து நூல்முகம் தந்த தமிழ்க்கடலாம், சிவமணி, சிவம்பெருக்கும்சீலர் **ராய. சொ.** அவர்கட்கும், அழகுற அச்சிட்டு உதவிய "திருமகள்" அச்சகத்தாருக்கும்அம்பலத்தாடி அருள் செய்வாராக.

அன்பர்கள் அருச்சித்து வணங்கிப் பயன் பெறுக.

28—6—67
காரைக்குடி.

**சிவநேசர் திருக்கூட்டத்தார்.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தேவாரத் தல வணக்கம்

தென் தில்லை மன்றினுள் ஆடி போற்றி
வேட்கள நன் நகர் மேயாய் போற்றி
நெல்வா யில்வளர் நிதியே போற்றி
கழிப்பா லைஉறை கரும்பே போற்றி
நல்லூர்ப் பெருமண நம்பா போற்றி

மயேந்திரப் பள்ளி மன்னு போற்றி
தென் திரு முல்லை வாயிலாய் போற்றி
கலிக்கா மூர்வளர் கண்ணே போற்றி
சாய்க்காடு இனிதுறை சதுரா போற்றி
பல்லவ னீச்சரப் பரனே போற்றி

வெண்காடு உகந்த விகிர்தா போற்றி
கீழ்த்திருக் காட்டுப் பள்ளியாய் போற்றி
குருகா வூர்உறை குணமே போற்றி
காழியுள் மேய கடலே போற்றி
கோலக் காவிற் கோவே போற்றி

வேளூர் மேவிய வித்தகா போற்றி
கண்ணார் கோயில்வாழ் கனியே போற்றி
கடைமுடிப் பரமநின் கழல்கள் போற்றி
நின்றியூர் வளரும் நிதியே போற்றி
திருப்புன் கூர்அமர் திருவே போற்றி

நீடூர் நிருத்தநின் நீளடி போற்றி
அன்னி யூர்வளர் அரனே போற்றி
வேள்விக் குடிவளர் வேதா போற்றி
எதிர்கொள் பாடிஎம் இறைவா போற்றி
மணஞ்சேரி வார்சடை மணாளா போற்றி

குறுக்கைவீ ரட்டக் குழகா போற்றி
கருப்பறி யல்நகர் காப்பாய் போற்றி
குரக்குக் காவிற் குருவே போற்றி
வாளொளி புத்தூர் வாழ்வே போற்றி
மண்ணிப் படிக்கரை மணியே போற்றி

ஓமாம் புலியூர் ஒருவனே போற்றி
கானாட்டு முள்ளூர்க் கடவுளே போற்றி
நாரையூர் நன்நகர் நலமே போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
பந்தணை நல்லூர்ப் பசுபதீ போற்றி

கஞ்சனூர் ஆண்டகற் பகமே போற்றி
கோடிக் காவுடைக் கோவே போற்றி
திருமங் கலக்குடித் தேனே போற்றி
பனந்தாள் தாடகேச் சரனே போற்றி
ஆப்பா டிப்பதி அமலா போற்றி

சேய்ஞலூர் உறையுஞ் செல்வா போற்றி
திருந்துதே வன்குடித் தேவா போற்றி
வியலூர் இருந்துஅருள் விமலா போற்றி
கொட்டையூ ரிற்கோ டீச்சரா போற்றி
இன்னம்பர் ஈசநின் இணையடி போற்றி

புறம்பயப் பதிவாழ் புண்ணியா போற்றி
விசய மங்கை வேதியா போற்றி
திருவை காஉறை சிவனே போற்றி
வடகுரங் காடு துறையாய் போற்றி
பாங்கார் பழனத்து அழகா போற்றி

சீரார் திருவை யாறு போற்றி
நெய்த்தா னத்துநெய் ஆடியே போற்றி
பெரும்புலி யூர்ப்பெரு மானே போற்றி
மழபாடி வயிரத் தூணே போற்றி
பழுவூர் மேவிய பண்பா போற்றி

கானூர் மேயசெங் கரும்பே போற்றி
அன்பில் ஆலந்துறை அரசே போற்றி
வடகரை மாந்துறை வள்ளால் போற்றி
திருப்பால் துறைஉறை தேவே போற்றி
ஆனைக் காவுறை ஆதீ போற்றி

பைஞ்ஞீலி அண்ணல்நின் பாதம் போற்றி
பாச்சிலாச் சிராமப் பரனே போற்றி
ஈங்கோய் மலைஎம் எந்தாய் போற்றி
வாட்போக்கி மலையுறை வாழ்வே போற்றி
கடம்பந் துறைவளர் கடலே போற்றி

பாராய்த்துறை மேவிய பரனே போற்றி
கற்குடி மாமலைக் கண்ணுதல் போற்றி
மூக்கீச் சரத்து முதல்வா போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
எறும்பியூர் இருந்த எம்மான் போற்றி

நெடுங்களம் இனிதமர் நிமலா போற்றி
மேலைக் காட்டுப் பள்ளியாய் போற்றி
ஆலம் பொழிலுறை அரனே போற்றி
திருப்பூந் துருத்தித் தேசிக போற்றி
கண்டிவீ ரட்டக் கரும்பே போற்றி

சோற்றுத் துறைவளர் தொல்லோய் போற்றி
வேதி குடியுறை விசய போற்றி
தென்குடித் திட்டைத் தேவே போற்றி
திருப்புள்ள மங்கைத் திருவே போற்றி
சக்கரப் பள்ளிஎம் சங்கரா போற்றி

கருகா வூருறை கடம்பா போற்றி
திருப்பா லைத்துறைச் செல்வா போற்றி
நல்லூர்ப் பெருமநின் நற்பதம் போற்றி
ஆவூர்ப் பசுபதீச் சரனே போற்றி
சத்தி முத்தச் சதுரா போற்றி

பட்டீச் சரமுறை பரமா போற்றி
பழையா றைவட தளியாய் போற்றி
வலஞ்சுழி மேவிய வரதா போற்றி
குடமூக் கமர்கும் பேசா போற்றி
கீழ்க்கோட் டத்தெங் கூத்தா போற்றி

குடந்தைக் காரோ ணத்தாய் போற்றி
நாகேச் சரம்வாழ் நாதா போற்றி
இடைமருது உறையும் எந்தாய் போற்றி
தென்குரங் காடு துறையாய் போற்றி
நீலக்குடியுறை நிருத்தா போற்றி

வைகல் மாடக் கோயிலாய் போற்றி
நல்லம் நடம்பயில் நாதா போற்றி
கோழம் பத்துறை கோவே போற்றி
ஆவடு தண்துறை அமரா போற்றி
துருத்தி ஈசநின் துணையடி போற்றி

அழுந்தூர் ஆளும் அரசே போற்றி
மயிலா டுந்துறை மணியே போற்றி
திருவிள நகர்உறை திருவே போற்றி
பரியல்வீ ரட்டப் பரமா போற்றி
செம்பொன் பள்ளிச் செல்வா போற்றி

நனிபள்ளி வளரும் நம்பா போற்றி
வலம்புரம் மன்னிய வாழ்வே போற்றி
தலைச்சங் காடமர் தத்துவ போற்றி
ஆக்கூர் அமர்ந்த அம்மான் போற்றி
கடவூர்க் காலவீ ரட்டா போற்றி

கடவூர் மயானக் கடவுளே போற்றி
வேட்டக் குடியின் மேயோய் போற்றி
திருத்தெளிச் சேரிச் சிவனே போற்றி
தரும புரம்வளர் தாயே போற்றி
நள்ளா றுடைய நாதா போற்றி

கோட்டா றமருங் குழகா போற்றி
அம்பர் பெருந்திருக் கோயிலாய் போற்றி
அம்பர்மா காளத்தரனே போற்றி
மீயச் சூருறை விண்ணவ போற்றி
மீயச் சூரிளங் கோயிலாய் போற்றி

திலதைப் பதிவாழ் திலகமே போற்றி
பாம்புர நன்நகர்ப் பரமனே போற்றி
சிறுகுடிப் பிறைமுடிச் செல்வா போற்றி
விண்ணிழி வீழி மிழலையாய் போற்றி
வன்னியூர் மேவிய மைந்தா போற்றி

கருவிலி அமருங் கண்ணே போற்றி
பேணு பெருந்துறைப் பெம்மான் போற்றி
நறையூர்ச் சித்தீச் சரனே போற்றி
அரிசிற் கரைப்புத் தூரா போற்றி
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி

கலைய நல்லூர்க் கடவுளே போற்றி
கருக்குடி அண்ணல்நின் கழல்கள் போற்றி
திருவாஞ் சியம்வளர் தேவே போற்றி
நன்நிலத் துப்பெருங் கோயிலாய் போற்றி
கொண்டீச் சரத்துக் கோவே போற்றி

திருப்பனை யூர்வளர் தேவே போற்றி
விற்குடி வீரட்டம் மேயாய் போற்றி
புகலூர் மேவிய புண்ணியா போற்றி
புகலூர் வர்த்தமா னீச்சரா போற்றி
இராமன தீச்சரத் திறைவா போற்றி

பயற்றூ ருறையும் பண்பா போற்றி
செங்காட் டங்குடிச் சேவகா போற்றி
மருகற் பெருமநின் மலரடி போற்றி
சாத்த மங்கைச் சம்புவே போற்றி
நாகைக்கா ரோணம் நயந்தாய் போற்றி

சிக்கல் நகர்வளர்செல்வா போற்றி
கீழ்வே ளூராள் கேடிலீ போற்றி
தேவூர் ஆதிநல் தேனே போற்றி
பள்ளிமுக் கூடற் பரனே போற்றி
ஆரூர் அமர்ந்த அரசே போற்றி

ஆரூர் அரநெறி அப்பா போற்றி
பரவையுண் மண்தளிப் பரனே போற்றி
விளமர் உகந்த வித்தகா போற்றி
கரவீ ரச்சங் கரனே போற்றி
பெருவே ளூருறை பெரும போற்றி

தலையா லங்கா டமர்ந்தாய் போற்றி
குடவாயில் மன்னிய குருவே போற்றி
சேறைச் செந்நெறிச் செல்வா போற்றி
நாலூர் மயான நாடகா போற்றி
கடுவாய்க் கரைப்புத் தூரா போற்றி

திருஇரும் பூளைத் தேவே போற்றி
அரதைப் பெரும்பதி அமர்ந்தாய் போற்றி
அவளிவள் நல்லூர் அரசே போற்றி
பரிதி நியமப் பரனே போற்றி
வெண்ணிவாழ் விமலநின் மெல்லடி போற்றி

பூவனூர்ப் புனிதநின் பொன்னடி போற்றி
பாதா ளீச்சரப் பரமா போற்றி
திருக்களர் மேவிய தேவே போற்றி
ஓங்குசிற் றேமத்து ஒருவா போற்றி
உசாத்தா னத்தமர் உறவே போற்றி

இடும்பா வனத்துறும் இறைவா போற்றி
கடிக்குளத் துறைகடல் அமுதே போற்றி
தண்டலை நீணெறித் தாயே போற்றி
கோட்டூர் மேவிய கொழுந்தே போற்றி
வெண்டுறை மேவிய வேதா போற்றி

கொள்ளம் பூதூர்க் கோவே போற்றி
பேரெயில்ப் பெருமநின் பெய்கழல் போற்றி
கொள்ளிக் காடமர் கொற்றவ போற்றி
திருத்தெங் கூர்வளர் தேனே போற்றி
நெல்லிக் காஉறை நித்திய போற்றி

நாட்டியத் தான்குடி நம்பீ போற்றி
திருக்கா றாயில் தியாகா போற்றி
கன்றாப் பூர்நடு தறியே போற்றி
வலிவலம் வந்தருள் வரதா போற்றி
கைச்சினம் மேவிய கண்ணுதல் போற்றி

கோளிலி உறையுங் கோவே போற்றி
வாய்மூ ரடிகள்நின் மலர்ப்பதம் போற்றி
மறைக்கா டுறையும் மணாளா போற்றி
அகத்தியான் பள்ளி ஐயா போற்றி
கோடிக் கோயிற் குழகா போற்றி

திருவிடை வாய்வளர் தேவா போற்றி
கோணமா மலைகுடி கொண்டாய் போற்றி
அண்ணல்கே தீச்சரத்து அடிகள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
ஆப்ப னூர்வளர் ஐயா போற்றி

திருப்பரங் குன்றில் செல்வா போற்றி
ஏடகத் தெந்தைநின் இணையடி போற்றி
கொடுங்குன் றமருங் கோவே போற்றி
திருப்புத் தூர்த்திருத் தளியாய் போற்றி
திருப்புன வாயிலெம் செல்வா போற்றி

மால்செய்ரா மேச வாழ்வே போற்றி
ஆடா னையுறை ஆதி போற்றி
கானப் பேருறை காளாய்போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
சுழியல் வளருந் துணைவா போற்றி

குற்றா லத்தெங் கூத்தா போற்றி
நெல்வே லிய்யுறை செல்வாபோற்றி
அஞ்சைக் களத்துறை அப்பா போற்றி
அவிநா சிவ்வளர் அரனே போற்றி
முருகன் பூண்டி முதல்வா போற்றி

திருநணா வளரும் திருவே போற்றி
கொடிமா டச்செங் குன்றாய் போற்றி
வெஞ்சமாக் கூடல் விகிர்தா போற்றி
பாண்டிக் கொடுமுடிப் பழையோய் போற்றி
கருவூர் ஆனிலைக் கண்மணி போற்றி

நெல்வா யில்அரத் துறையாய் போற்றி
பெண்ணா கடத்துப் பெரும போற்றி
கூடலை யாற்றூர்க் கோவே போற்றி
எருக்கத்தம் புலியூர் எந்தாய் போற்றி
திருத்தினை நகரச் சிவனே போற்றி

சோபுர மேவிய சொக்கா போற்றி
அதிகைவீ ரட்டத் தழகா போற்றி
நாவலூர் மேவிய நம்பா போற்றி
முதுகுன் றமர்ந்த முனிவா போற்றி
நெல்வெண்ணெய் மேவிய நிருத்தா போற்றி

கோவல்வீ ரட்டக் கோமான் போற்றி
அறையணி நல்லூர் அரசே போற்றி
இடையா றிடையமர் ஈசா போற்றி
வெண்ணெய்நல் லூருறை மேலோய் போற்றி
துறையூர் அமர்ந்த தூயோய் போற்றி

வடுகூர் அடிகள் மாணடி போற்றி
திருமாணி குழிவளர் தேவே போற்றி
பாதிரிப் புலியூர்ப் பரம போற்றி
முண்டீச் சரத்து முதல்வா போற்றி
புறவார் பனங்காட் டூரா போற்றி

திருஆ மாத்தூர்த் தேவே போற்றி
அண்ணா மலைஎம் அண்ணா போற்றி
ஏகம் பத்துறை எந்தாய் போற்றி
கச்சிமேற் றளியுறை கடலே போற்றி
ஓண காந்தன் தளியாய் போற்றி

கச்சிஅ நேகதங் காவதா போற்றி
கச்சிநெறிக் காரைக் காடா போற்றி
குரங்கணில் முட்டங் குலவினாய் போற்றி
மாகறல் வாழும் மருந்தே போற்றி
ஓத்தூர் மேவிய ஒளியே போற்றி

வன்பார்த்தான் பனங்காட் டூரா போற்றி
திருவல்லம் மேவிய தீவணா போற்றி
மாற்பே றுள்உமை மணாளா போற்றி
திருவூ றல்வளர் தேவே போற்றி
இலம்பையங் கோட்டூர் ஈசா போற்றி

விற்கோ லத்துறை வீரா போற்றி
ஆலங் காட்டெம் அடிகள் போற்றி
பாசூர் அமர்ந்த பசுபதீ போற்றி
வெண்பாக் கத்துறை விமலா போற்றி
கள்ளில் மேய கனியே போற்றி

காளத்தி நாதநின் கழலிணை போற்றி
ஒற்றி யூருடை ஒருவ போற்றி
வலிதா யம்உறை வள்ளால் போற்றி
வடதிரு முல்லை வாயிலாய் போற்றி
வேற்காட்டு வேத வித்தகா போற்றி

மயிலைக் கபாலிச் சரத்தாய் போற்றி
வான்மியூ ரமர்ந்த வாழ்வே போற்றி
கச்சூ ராலக் கோயிலாய் போற்றி
இடைச்சுரம் இருந்த எழில்வண போற்றி
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி

அச்சிறு பாக்கம் அமர்ந்தாய் போற்றி
வக்கரை அமர்ந்த வரதா போற்றி
அரசிலி நாதா ஐயா போற்றி
இரும்பைமா காளத் திறைவா போற்றி
கோலக் கோகர்ணக் கொழுந்தே போற்றி

திருப்பருப் பதத்துத் தேவே போற்றி
இந்திர நீல மலையாய் போற்றி
அநேகதங் காவதம் அமர்ந்தாய் போற்றி
கேதா ரக்கிரிக் கிழவோய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி



# நகரக் கோயில் வணக்கம்

திருவீங் கைக்குடித் தேவா போற்றி
கணேச நகற்கற் பகமே போற்றி
இளையாற் றங்குடி இறைவா போற்றி
இரணியூர் இருந்தாட் கொண்டாய் போற்றி
வயிரவன் கோவில் மருவியோய் போற்றி
நேமத் துறைசெயங் கொண்டாய் போற்றி
இருப்பைக் குடிவளர் எந்தாய் போற்றி
மாற்றூர் உறைஅரு மருந்தே போற்றி
சூரைக் குடிவளர் தோன்றல் போற்றி
வேலங் குடியுறை வித்தகா போற்றி
மருதங் குடியுறை வாழ்வே போற்றி
வாடா மலர்மங் கைமருதா போற்றி
சிவகா மிநாத திருவீசா போற்றி